உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

திருமுறைகண்ட புராணமென்னும்

# நம்பியாண்டார் நம்பி

## புராண வசனம்.

---

இஃது

சிவானந்த சாகர யோகீசுவர ரவர்கள் மாணாக்கர்

மா. நமசிவாயம் பிள்ளையவர்களால்

இயற்றப்பட்டது.



தி. வி. இராஜரத்தின முதலியாரவர்களால்

பதிப்பிக்கப்பட்டது.

துந்துபி௵ சித்திரைமீ

உ

# நூல் வரலாறு

அருட்பெருவள்ளலாகிய ஸ்ரீமத் தாயுமான சுவாமிகளால் "சிற்றம்பல மன்னும் சின்மயரான்தில்லை நகர்க், கொற்றங்குடிமுதலைக் கூறுவா ளெந்நாளே எனத் துதிக்கப்பட்டவரும், தில்லைவாழந்தணர் மரபிலுதித்தவரும், சித்த சைவ சாத்திரம் பதினான்கில், பிந்திய எட்டு நூல்களை இயற்றியருளிய கைலாய பாரம்பரைச் சந்தானகுரவர்களில் ஒருவரும், சிற்சபேசன் கொடுத் (௪)
முகத்தின்படி பெற்றான் சாம்பானுக்கு முத்திகொடுத்தவருமாகிய கொற்றங்குடி உமாபதி சிவாச்சார்ய சுவாமிகள் செய்யுள்வடிவமா திருமுறைகண்ட புராணத்தைத்தழுவி இந்நூல் எழுதப்பட்டது.

இவ்வாச்சார்ய சுவாமிகள் சரிதம் பின்னர் விசிதமாய் வெளிவருமாகை (௫)
நண்டு சுருக்கிக் கூறப்பட்டது.

இந்நூல் சைவப்பெரியார் (இருபதின்மர்) சரித்திர மஞ்சரியில் முதலாவ தாகும். இரண்டாவது ஸ்ரீமத் சேக்கிழார் சுவாமிகள் புராணவசனம் இதன் பின் வெளி வரும். அதன் பின் ஏனையபதினெட்டு நூல்கள் ஒன்றன்பின்னொன் றாக வெளிவரும்.

இங்ஙனம்

மா. ந. பி.

இந்நூல் விற்குமிடம்.

ஸ்ரீ பாலசுப்பிரமணியம் கம்பெனி

எண் ௨௬ தலையாரித்தெரு, புதுப்பாக்கம்

சென்னை.

உ

சிவமயம்.

# திருமுறைகண்ட புராணமென்னும் நம்பியாண்டார் நம்பி புராண வசனம்.

---

## காப்பு.

மாதங்க முகத்தானை மருவுமிடர் களைவானை மருமமீது
மாதங்க மகிழ்வானை மகவையெரித் தொருபகுதி மன்னு மாக
மாதங்க மருவிறைமுன் மைந்தனையெவ் வுலகுஞ்செய் மகிமை யாளி
மாதங்க டொறுநான்கின் மாபூசைக் காட்சியனை வணக்கஞ் செய்வாம்

---

## தெய்வ வணக்கம்.

### பரமேசுவரர்.

அகரமெனு முயிரொன்றே யக்கரங்க ளனைத்தா
யவையவு மன்றாய்முன் னூர்ந்திடுத லேபோற்
பகாநனியண்ட மெலா மாகியவை யன்றாய்ப்
பரவிபரி பூரணமன் பழமையுறு பொருளைத்
தகர்தலுறு பூதாகந் தாங்காம லருளின்*
றனியுருவு முருவருவுந் தாங்குமுயர் பொருளைத்
தகரவெளி தனினடன மிடுகின்ற பொருளைச்
சார்ந்துபணி செய்தருளை யார்ந்திடுவ மின்றே (க)

### உமாதேவியார்.

பார்பூத்த பசுங்கொடியைப் பவளவிதழ்க் கொடியைப்
பருவமிரு நான்குடைய பரைக்கொடியை யழியாச்
சீர்பூத்த சிவைக்கொடியைச் சிவஞானக் கொடியைத்
திருமறைக ளுதிகொடியைச் சிவத்தருவின் கொடியைப்
பேர்பூத்த வரையிறைமுன் பெற்றமணிக் கொடியைப்
போருட்கந் தரத்தோடு பிறங்கிடைமின் கொடியை
நீர்பூத்த மலரருட்கண் ணிறைவனப்புக் கொடியை
நீங்காதெம் முளமிருத்தி நீக்கிடுவம் மிடரே. (உ)

---

*அடியவர்கட்கு அனுக்கிரகஞ் செய்யும் பொருட்டு, ஈசுவரன் கொள்ளும் வடிவங்கள்; பஞ்சபூத சம்பந்தமாகிய தோல், இரத்தம், மாமிசம் முதலியவையோடு கூடியவையன்று என்பதனையும், இவையல்லாத அருள்வடிவமாகுமென்பதனையும் " . . . . காயமோ மாயையன்று காண்பது சத்தி தன்னால்" என்பது முதலிய சிவஞானசித்திச் செய்யுட்களானறிக.

## மூத்தபிள்ளையார்.

மன்னுமரன் முன்னருணன் மறையதனைப் பயின்றிடுவோர் மரபாய் முனைம
பன்னுமொரு பிரணவத்தின் பண்பினொடு வத்துவிதப் பான்மை யெல்லாம்
இன்னதெனை வுணர்த்திடுதற் கிபமுகமுற் றெழுந்தவனை யிறைஞ்சி நம்பி
இன்னமுதத் தமிழ்மறையின் றிருமுறையை வகுத்தமைத்த வியல்பு சொல்வாம்.

## இளையபிள்ளையார்.

நான்கானை யுறுகோட்டுக் கரிக்கஞ்சி னெனென்று நடுங்கும் மானை
நான்கானை யுறுதணிகை வரையிருத்திப பிறப்பிறப்பு நலியில் லாமை
நான்கானை யுறுமடியர்க் கின்பருள்வா னவ்வரையி னவமாய் மேவி
ஞன்கானை யுறுமலரி னிருசரணம் மனமொருமி நாளுங் காண்பாம். (௩)

## சேய்ஞலூர்ப்பிள்ளையார்.

பத்திமிகு பான்பூசைப் பண்ணுனுற்றும் பயனதனற் பயந்த தந்தை
தத்துபதந் தடிந்தமறச் சார்பின்றித் தனித்தீக்கை தனைப்பெ ருதோர்
உத்தமநற் குலத்தவரா யினுமுண்ணத் தீண்டிடக்கண் ணுறவொண் ணுத
அத்தனினின் மாலியத்துக் காட்சியடைந் தவனடிகட் கன்பு செய்வாம். (௪)

## ஆளுடையபிள்ளையார் முதலினர்.

சங்கரனு மவன்சேயுந் தனித்தலைமைப் புலவாகளாய்ச் சார்ந்து காத்த
துங்கமிகு தமிழ்மொழியு மாரியமு மொழிகளுக்குத் துன்னு முச்சி
தங்குநிலை பெற்றவெனத் தலம்பலவு முணர்ந்திடவத் தமிழில்வேதம்
இங்குபல வற்புதங்க ளிழைத்தளித்த நால்வர்தமை யிறைஞ்சு வோமால் (௫)

## சுவேதவனப்பிள்ளையார் முதலினர்.

உலகர்பெற மூவாண்டி லோதரம லேயோர்ந்
துயர்கவுணி யன்றந்த தமிழ்மறையை நம்பி
நிலவுபுனை வெள்ளைவன நின்மலனை யேத்தி
நின்றதவ மொன்றுமகி' பன்றனது சேயாய்த்
தலமருவி யீராண்டி லோதாம லோர்ந்தே
தனிஞான போதமிளிர் தமிழினி லியற்றி
உலவுகய முகனெப்ப வோதியிவ ணீந்த
வொருகுரவ சவரடிய ரருண்மழையில் வாழ்வாம். (௬)

## போதகாசிரியர்.

ஊவாநந்த வுருகிகர்கந் தாக்கவுரி யுழையிருத்தி யுவந்தோ னுமந்
திவானந்த ருங்கேழ்வ னென்னுமொருசத் சித்தனிற் றிகழானந்தன்
தவானந்த ருறையருட்செந் தியிற்குமா னடிமறவாத் தகையெங் கோனுஞ்
சிவானந்த சாகாமா யோகியர்த மலரடியைச் சிரத்திற் கொள்வாம். (௭)

---

உ

சிவமயம்.

# திருமுறைகண்டபுராணமென்னும்

# நம்பியாண்டார் நம்பி

## புராணவசனம்.

## சோழநாடு.

அநாதி முத்தனாகிய பரமேசுவரனது ஆணையால் விளங்கும் உலகங்கள் எண்ணிறந்தன. அவற்றுள் ஒன்றாகிய இப்பூவுலகம் ஏழு தீவுகளையுடையது. அவை; நாவலந்தீவு, சாகத்தீவு, குசைத்தீவு, கிரவுஞ்சத்தீவு, சான்மலித்தீவு, கோமேதகத்தீவு, புட்கரணித்தீவு என்பனவாம்.

இவற்றுண்முதன்மைத்தாகிய நாவலந்தீவு ஒன்பது கண்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அவை; பாரதகண்டம், கிம்புருடகண்டம் அரிவருடகண்டம், இளாவிரதகண்டம், பத்திராசுவகண்டம், கேதுமாலகண்டம், இரமியகண்டம், இரணியகண்டம், குருகண்டம் என்னும் பெயர்களையுடையனவாம்.

இவற்றுள் முதன்மைத்தாகிய கண்டமானது * மனு வமிசத்திலே பிறந்த பரதன் என்பவன் ஆதியில் அரசுபுரிந்திருந்த காரணத்தால் பாரதக்கண்டமெனப் பெயர்பெற்றது. இக்கண்டம் ஒன்றே அநேகாயிரந் தேவாலயங்களையும், புனிதமிகுந்த பல புண்ணிய நதிகளையும், மிகுந்த

* சுவாயம்புமனுவின் பௌத்திரனாகிய அக்கினிநேத்திரன் என்பவன் ஆதியில் நாவலந்தீவை அரசுபுரிந்து வந்தனன். அவனுக்கு ஒன்பது புதல்வர்கள் இருந்தனர். இவ்வொன்பதின்மர் பெயர்; பாரதன், கிம்புருடன், அரிவருடன், இளாவிரதன், பத்திராச, கேதுமாலி, இரமியன், இரணியன், குரு என்பனவாம். அக்கினி நேத்திரன் இறந்த பின்னர் அவனது புத்திரர் ஒன்பதின்மரும், அவன் அரசுபுரிந்த நாவலந்தீவை ஒன்பதுபங்காகப்பிரித்து அரசுபுரிந்துவந்தனர். ஆதலால் இவ்வொன்பதின்மர் பெயர்களே ஒன்பது கண்டங்களுக்கும் காரணப்பெயர்களாயின. இங்ஙனம் சிவாகமங்களும் மகாபுராணங்களும் கூறுகின்றன.

தெய்வபக்தியுள்ள மனிதர்களையும் உடையதாகும். இக்கண்டத்தின் தென்கீழ்ப் பாகமே நாம் வசிக்கும் தமிழ்நாடாகும். கீழ்க் கடலைக் கிழக் கெல்லையாகவும், கன்னியாகுமரியைத் தெற்கெல்லையாகவும், குடகுநாட்டை மேற்கெல்லையாகவும், திருவேங்கடமலையை வடக்கெல்லையாகவும் உடைய இத்தமிழ்நாடு, மூன்று பிரிவினையுடையதாகும். அவை சேரன், சோழன், பாண்டியன் என்னும் மூன்று அரசர் அரசுபுரிந்த காரணத்தால் சேரநாடு, சோழநாடு, பாண்டிநாடு எனப்பெயர்பெறும். இவற்றுள் நடுநாயகமாய் விளங்குவது சோழநாடாகும்.

## திருவாரூர் நகர்.

கங்கை சுமந்த கண்ணுதல் கந்தவேளா, கான்மலரடிக்குக் கனிந்தவன்பராம், கருணைபொழியும் கலசமுனிமுன், காதவழ்சையக் கல்லகமேவுங் கவேரமுனிவரின் காஞச்சிரமக் கல்வினில் வைத்த கமண்டல நீரை, ககனவுலகக் காவலற்காகக் கணேசப் பெருமான் காக்கை வடிவாய்க் கரந்து கொட்டிட, கதித்திடு மாநீா கரைபெறவோடிக் கடற்றுறை யடைந்த கவினூர்வழியே காவிரிநதியாம்.

இக்காவிரி நதியாற் சூழப்பெற்ற சோழவள நாட்டினிடையில் திருவாரூர் எனப் பெயரிய நகா ஒன்றுளது. இந்நகர் சோழவேந்தனது இராஜதானி நகர் ஐந்தினி* லொன்றாகும். அன்றியும் "திசையெட்டும் வகுப்பதற்கு முன்னோ பின்னோ திருவாரூர்க் கோயிலாக் கொண்டநாளே" என்ற திராவிடவேத வாக்கியப் படிக்கும், "சொன்னநாட்டிடைத் தொன்மையின் மிக்கது . . . . ." என்ற அருண்மொழித்தேவா திருவாக்கின்படிக்கும, மற்றைய நகர்களுக் கெல்லாம் மிக்க பழமை பெற்று விளங்குவதாகும்.

அன்றியும், அந்தணர்வீதி, அரசர்வீதி, வைசியர்வீதி, சூத்திரர் வீதி, கடைவீதி, ஆதிசைவர்வீதி, சைவர்வீதி, சைவமுனிவர் ஆச்சிரம வீதி, அறசசாலைவீதி முதலிய அநேக வீதிகளையும், ஆஸ்தானமண்டபம், அரசர் மண்டபம், கொலுமண்டபம், விநோதமண்டபம், நியாய மண்டபம், சபையில் மண்டபம் முதலிய அநேக மண்டபங்களையும் உடையதாகும். அன்றியும் மண்ணுட்டரசர் கோமானாகிய முசுகுந்தன் விண்ணுட்டரசனாகிய இந்திரன்பால் ஏழாவது தடவை பெற்று, விண்ணு

* சோழவேந்தனுடைய இராஜதானி நகர் ஐந்தாவன:—காவிரிப்பூம் பட்டினம், திருவாரூர், உறையூர், கருவூர், திருச்செய்ஞலூர் என்பனவாம்.

லகினின்றுங் கொண்டுவந்து பிரதிஷ்டை செய்து பூசிக்கப்பட்ட தியாகராஜப் பெருமான் எழுந்தருளிய கமலாலயமென்னும் திருக்கோயிலையும், ஆதிசேடன் பூமியைச் சுமப்பதாலுண்டாகிய வெப்பத்தைத் தணிக்குமபொருட்டு அவன் சிரத்தில் நீர்படும்படி தோண்டப்பட்டதோவென்று ஐயுறத்தக்க ஆழமும், மிக்க விசாலமுமுள்ள தடாகத்தையும் உடையதாகும்.

அன்றியும் பரமேசுவரன் ஒரு பசுவாயும் இயமன் ஒரு கன்றாயுந் தோன்றி; சூரியவம்ஸத்துச் சோழவேநதர் பரம்பரையிலுதித்து அந்நாட்டினை அரசுபுரிந்திருநத மனுச்சோழனது நடுநிலைமையினையும், சத்தியந் தவறாத உத்தம குணததினையும் யாவருங்கும் வெளிப்படுத்தி அருள் புரிந்ததாகிய அரும்பெரும் அற்புதங்களை நிகழப் பெற்றதாகும்.

---

* முன்னொருகாலத்தில் வலாசுரன் என்னும் அவுணனொருவன், தன்சேனைகளுடன் விண்ணாட்டை யடைந்து இந்திரனோடு போர்புரிநதனன். இந்திரன் தோல்வியடைந்து மனமுளைந்து தனக்கு உதவிபுரியுமாறு பூவுலகத்தையாளும் முசுகுந்தச் சக்கரவர்த்தியை யழைத்தனன் முசுகுந்தன் தனது சேனைகளுடன் விண்ணாட்டிற்கேகி அவுணப்படைகளைக கொன்று, அடங்காவசுரனை வென்று நின்றனன். அதனைக்கண்ட இந்திரன் மன மகிழ்ந்து தனதரண்மனைக்குச்சென்று முசுகுந்தனுக்கு விருந்துணவருத்தி ஆடையாபரணங்களணிவித்து உபசரித்தனன். பின்னும இந்திரன் முசுகுந்தனைப பார்த்து மன்னர் மன்ன! நீ பேருதவி புரிந்ததற்கு இன்ன கைம்மாறு புரிவதெனை எனக்குத் தோன்றவில்லை யாதலின் நீ விரும்பியதைக்கேள் என்றனன். அதனைக்கேட்ட முசுகுந்தன் "பூவுலகில் யான் பூசனை புரியுமாறு நீ நாடோறும் பூசித்துவரும் தியாகராஜப்பெருமானை நல்குதி" என்றனன். அதனைக்கேட்ட இந்திரன் தனது ஆன்ம நாதனை யளிக்க மனமிலலாதவனாய் நாளையதினம் நல்குவேன் என்றனன். மறுநாள் இந்திரன் அத்தியாகராஜப் பெருமானைப்போல் தெய்வக்கம்மியனைக்கொண்டு ஒரு திருவுருவம் செய்வித்துக் கொடுக்க, முசுகுந்தன் நான் வேண்டியது இம்மூர்த்தியன்று என்றனன். பின்னும் இப்படியே இந்திரன் ஐந்து தடவை வேறு வேறு மூர்த்திகளைச் செய்வித்துக் கொடுக்க நான்வேண்டுவது இம் மூர்த்தியன்று இம் மூர்த்தியன்று என்றனன். பின்னர் இந்திரன் மனம்வருந்தித் தான் பூசிக்கும் மூர்த்தியை எடுத்துக்கொடுக்க, முசுகுந்தன் அன்போடு பெற்று அம் மூர்த்தியையும் ஏனைய ஆறு மூர்த்திகளையுந் தாங்கிப் பூவுலகினுக்கு வந்து இந்திரன் பூசித்த தியாகராஜமூர்த்தியை, திருவாரூர்ப் புற்றிடங் கொண்டார் ஆலயத்தமைத்துப் பூசித்து வந்தனன். ஏனைய ஆறு மூர்த்திகளை நாகப்பட்டின முதலிய ஆறு தலங்களிலமைத்து ஆராதிக்கச்செய்தனன். முருகக்கடவுள் சூரபத்மன் முதலினரைச் சங்கரித்துத் தெய்வயானையம்மையை, திருப்பரங்குன்றத்திலே திருமணம் புரிந்த காலத்தில் முசுகுந்தச் சக்கரவர்த்தி இவ்வுலகை யாண்டிருந்தனன்.

# அபயகுலசேகரசோழனது அரசாட்சி.

மேற்குறித்த மனுச் சோழனது பிற்சந்ததியிலே தோன்றிய அபய குலசேகரசோழன் என்னும் அரசன் ஒருவனிருந்தனன்: அவன் இளமைப்பருவத்திலேயே வில்வித்தை, வாள்வித்தை, யானை யேற்றம், குதிரை யேற்றம், இரத சாரத்தியம் முதலியன பயின்று போர்த்தொழிலில் மிக்க வல்லவனாயினன்; அன்றியும் தமிழ் இலக்கிய விலக்கணங்களையும், நீதி நூல்களையும் ஐயமறக் கற்றபின் வடமொழிபயின்று தர்க்க வியாகரண நூல்களுணர்ந்து வேத வேதாந்தங்களையும் உபநிடதங்களையும் சிவாகமங்களையும் புராணேதிகாசங்களையும் ஓதியுணர்ந்தனன்.

அதனால் அநாதிமல முத்தனாயும், நித்தியனாயும் ஆதியந்தமற்றவனாயும், சர்வவியாபகனாயும், பரம்பொருளாயும் விளங்கும் ஈசுவரன் ஒருவனே என்றும், அவனே பதியென்றும், அப்பதியைப்போலவே பசு பாசங்களும் அநாதியாயுள்ளனவென்றும், பசுக்கள் செம்பிற்களிம்புபோல அநாதியே பாச சம்பந்தமுற்றனவென்றும், பதி ஆள்பவன் என்றும், பசுக்கள் பதிக்கு முக்காலத்தும் அடிமையென்றும், வேதோபநிடத சிவாகமங்களின் முடிபு இவைகளேயாம் என்றும் நன்குணர்ந்தனன்.

அதனால் ஈசுவரபத்தி, அடியார்பத்தி, சீவராசிகளிடத்துக் கருணைபாராட்டல், தன்னுயிர்போல் மன்னுயிர்காத்தல் முதலிய நற்குணங்கள் எக்காலத்தும் நீங்காதுவாழும் இல்லமாகிய உள்ளத்தினையுடையவனாயும், இருக்காதி வேதசிவாகமங்களாற் றுதிக்கப்படும் சிவ சின்னங்களாகிய விபூதி உருத்திராக்கங்களே தனக்குப் பெரும்பொக்கிஷமாகக் கொண்டவனாயும் விளங்கினன்.

இவ்வரசன் எவ்வனப்பருவமடைந்து அச்சோழநாட்டின் அரசுரிமையை, தன் தந்தையால் அளிக்கப்பெற்று வகித்துக் குடிகளிடத்து ஆறிலொருபங்கு பகுதிவாங்கியும் அக்குடிகளுக்கு எவ்வகை யிடையூறும் நேராதபடி கண்ணை இமை காப்பதுபோற் காத்தும் அறநெறி தவறாது செங்கோல் செலுத்தி வந்தனன்.

மண்ணுலகில் அநேக அரசர்கள் தேச விசாரணை செய்தபின்; சூதாடல், ஊனுணவுக்காக வேட்டையாடல், பந்தாடல், மதுமாமிசமுண்டு மயங்கிக்களித்தல் முதலிய மகாபாவ வுபபாவச்செய்கைகளில் ஒழிந்த காலங்களைப்போக்குவதுபோலவும், விண்ணுலகாசனாகிய இந்திரன், ஊர்வசி அரம்பை முதலிய பெண்களாகிய மாதர்களது பாதநாட்டியத்தையும்,

சங்கிரங்களையும் கண்டு கேட்டுக் களித்து, ஒழிந்த நேரங்களை அவமே போக்குவது போலவும் செய்யாது, அபயகுல சேகரசோழன் விண்ணாட்டிறைவனுக்கும் மண்ணாட்டரசருக்கும் நன்னாட்டமுண்டாமாறு புத்திபுகட்டுவோனும், தேசவிசாரணை செய்தபின், ஈசுவரனது திருவருட் செயல்களைக்கேட்டலிலும், அப்படிக்கேட்டவைகளைப் பிறருக்குரைத்தலிலும், அவ்வீசுவரனது மெய்யடியாரோடு சம்பாஷிப்பதிலும் ஒழிந்த நேரங்களைப்போக்குவன்; இராக் காலங்களில் இரவலன்போலவும், பரதேசிபோலவும் மாறு வேடம்பூண்டு, நகரசோதனைசெய்து குடிகளின் கஷ்டநஷ்டங்களைத் தெரிந்து அவர்களுக்கு வேண்டும் நன்மைகளைச் செய்வான். காமம், குரோதம், உலோபம், மோகம், மதம, மாற்சரியம், அகங்காரம், பொறாமை, வஞ்சகம், டம்பம் முதலிய துர்க்குணங்களாகிய இருளைத் தனது அறிவாகிய கிரணங்களோடு கூடிய செங்கோலென்னுங் கதிரவனைக்கொண்டு அச்சோழநாட்டிற் பிரவேசியாதபடி கடிநது அகற்றிவருவான். அன்றியும் இத்தமிழுலகம் எக்காலத்தும் மறவாதிருக்கும்படி பல அரும்பெருஞ்செய்கைகள் இயற்றிவநதனன்.

## சோழன் திருமுறைகளைத் தேடுவித்தது.

அபயகுலசேகரசோழன் இவ்வாறு செங்கோல செலுத்திவரும நாளில், தன்னிடத்து வரும் சிவனடியார்கள், சைவ சமையாச்சார்யர் நால்வரில் ஸ்ரீமத திருஞான சம்பந்த மூர்த்திசுவாமிகள் முதலிய மூவரருளிய தேவாரப்பதிகங்களில் ஒவ்வொன்றினைச் சொல்லக்கேட்டு, தன்னை யறியாது கண்களினின்று நீர் தாரை தாரையா யொழுகவும் சரீரம் புளகாங்கிதங் கொள்ளவும் சிரமேற்கரங் கூப்பிப் பரமேசுவரனைச் சிந்தித்து ஆனந்தசாகரத்தி லழுந்தியிருந்தனன். அதனால் அத்தேவாரத் திருமுறைகளை முற்றுங்கேட்கவும் தான் ஓதவும் பூசிக்கவும் அவா மிக்குடையோனாயினன். அதனால் தேவாரத்திருமுறைகள் முற்றும இருக்கு மிடத்தைத் தெரிந்து வரும்படி எதிக்கினும் ஒற்றர்களை யனுப்பினன். அவ்வொற்றர்கள் தமிழ்நாடு முழுதுஞ்சென்று தேடியும் தேவாரத் திருமுறைகள் முழுமையும் இருக்குமிடம் அறியாதவர்களாய்த் திரும்பி அரசனிடம் வந்து இறைவ! இத்தமிழ் நாட்டிலுள்ள ஒவ்வொரு கிராமங்களிலுஞ் சென்று தேடினோம். திருமுறைகள் இருக்குமிடம் தெரிநதிலோம் என்றனர். இதனைக் கேட்ட வேந்தன மனமநைந்து கவலைக் கடலி லாழ்ந்திருந்தனன்.

# நம்பியாண்டார் நம்பி

## திருவவதாரம்.

மேற்புகன்ற சோழவள நாட்டிலுள்ள திருநாரையூர் * என்னுந் திருப்பதியிலே, அவ்வூர்ப் பொள்ளாப் பிள்ளையாரை அர்ச்சிக்கும் ஆதிசைவர் ஒருவரிருந்தனர். இத்தநிலநாடு உய்யவேண்டி இறைவன் றிருவருளால் அவ்வாதி சைவருக்கு ஒரு ஆண்மகவு பிறந்தது. அக் குழந்தை நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாகத் தாய் தந்தையரால் சீராட்டிவளர்க்கப்பட்டது. அச்செல்வக் குழந்தை, செங்கீரையாடியும், தாலாட்டப் பெற்றும், சப்பாணிகொட்டியும், முத்தந்தந்தும், வருகவென அழைக்கப்பட்டும், சிறுபறை கொட்டியும், சிற்றிலிழைத்தும், சிறுதேருருட்டியும் விளையாடி மகிழ்ந்து வளர்ந்து ஐந்து பிராயம் அடைந்தது. தந்தையார் இப்பிள்ளைக்கு வேதவிதிப்படி உபநயனச் சடங்கு செய்வித்து நம்பி எனப் பெயரிட்டதோடு வித்தியாப்பியாசமும் செய்வித்தனர். பின்னர் குழந்தையாகிய நம்பியார் பாடசாலைக்குச் சென்று நல்லாசிரியர்பால் வடமொழியும் தமிழ் மொழியும் பயின்று பாஷாஞானம் நிரம்பப்பெற்று வேத முதலிய கலைகளைக் கற்று வந்தனர்.

## நம்பியார் விநாயகரைப் பூசித்தது.

இப்படியிருக்கும் நாளில் அவ்வாதிசைவருக்கு, அயலூருக்குச் சென்று சின்னாள் அங்கு தங்கிவரும்படி நேரிட்டது. அப்பொழுது அவர் தமது அருமைப் புதல்வராகிய நம்பியாரை அழைத்து "யான் வேற்றூருக்குச் சென்று திரும்பி வருமளவும் காலந்தவறாது நீ ஆலயத்தையடைந்து கணேசப் பெருமானுக்கு நான் செய்துவந்தது போல பூசைநைவேத்தியங்களைச் செய்து வருவாயாக" என்று பணித்து வேற்றூருக்குச் சென்றனர். தந்தை சட்டளைப்படி நம்பியார் பூஜாதிரவியங்களை எடுத்துக் கொண்டு ஆலயமடைந்து கணேசப் பெருமானுக்குத் தம் தந்தை செய்வதுபோல, எண்ணெய், சிக்காய்த்தூள், நெல்லிமுளித்தூள், பால், தயிர், தேன், இளநீர், கருப்பஞ்சாறு, சர்க்கரை, எலுமிச்சம்பழம், வாழைப்பழம், பஞ்சாமிருதம், பஞ்சகவ்யம், பன்னீர், திருநீறு முதலியவற்றால் அபிஷேகஞ்செய்து பட்டாடைகளையும் பொன்னாபரணங்களையும் வாசனை பொருந்திய மலர்மாலைகளையும் அழகுபெறச் சாத்தினர்.

---

* திருநாரையூர் என்னும் நகர் சிதம்பரத்திற்குத் தென்மேற்கில் சுமார் எட்டு நாழிகைவழி தூரத்திலுள்ளது.

## பிள்ளையார் நிவேதனப்பண்டங்களைப் புசித்தது.

நம்பியார், தம் தந்தை கணேசப்பெருமானை ஆராதிப்பதைப் பன்முறை பார்த்திருந்தனராயினும் நிவேதித்த பிரசாதங்களை மீட்டுந் தம்மில்லத்திற்கு எடுத்துக்கொண்டுபோவதைக் கவனியாததால், நிவேதனப்பண்டங்களைக் கணேசப்பெருமான் உண்பதாகவே நினைத்திருந்தனர். ஆதலால் நம்பியார் அன்ன முதலிய நிவேதனப்பண்டங்களை அக்கணேசப்பெருமான் முன் வைத்து எம்பெருமானே! இவைகளை நீர் உண்ணவேண்டும் என்று பிரார்த்தித்தனர். நம்பியார் தம் பிரார்த்தனைப்படி கணேசப்பெருமான் அப்பண்டங்களை உண்ணாதிருப்பக்கண்டு மிக்க விநயமாய் உண்ணும்படிப் பின்னும் பன்முறை பிரார்த்தித்தனர். அப்பொழுதும் கணேசப்பெருமான் உண்ணவில்லை.

அதனால் நம்பியார் மிக்க மனக்கவலையுற்று இப் பண்டங்களை ஐங்கரக்கடவுள் உண்ணாதிருப்பதற்குக் காரணந் தெரியவில்லையே, யான் செய்த பூசையில் யாதேனுங் குறையுளதோ, அல்லது கால தாமதமாய் வந்தனன் என்னுங் கோபமோ, அல்லது சிவதீட்சை யில்லாச் சிறியன் தொட்டதைத் தீண்டலாகாதென்னுங் கருத்தோ, அல்லது இப்பண்டங்களை யெடுத்துக்கொண்டு வரும்வழியில் ஆசாரமில்லோர் அருகே வந்து இவைகளை நிஷித்த மாக்கினரோ, ஒன்றுந் தெரியவில்லையே என்செய்கேன் என்செய்கேன் என்று பலபல சொல்லிப் பரிதபித்தனர்; பின்னுங் கணேசப்பெருமானை நோக்கிச் சுவாமீ! யான்செய்த பூசையில் யாதேனுங் குறையுளதேல் அறிவித்தால் இக்கணமே அதனை யகற்றி விடுவேன். என் தந்தை கொண்டுவந்த பொழுதெல்லாம் உண்டு களித்த நீர் இப்பொழுது இப்பண்டங்களை உண்ணாமலும் உண்ணாததற்குக் காரணஞ் சொல்லாமலும் மவுனமாயிருந்தால் சிறியேன் யாது செய்ய வல்லேன். ஈசன் புதல்வ! இப்பொழுது கிருபை கூர்ந்து இவைகளை யுண்ண வேண்டும். அல்லது உண்ணாததற்குக் காரணம் இன்னதெனச் சொல்லி யருளல்வேண்டும் என்று அழலிடைப்பட்ட வெண்ணெய்போல மனமுருகிப் பணிந்து கேட்டனர். அப்பொழுதுங் கணேசப்பெருமான் அவைகளை உண்ணவில்லை, காரணஞ் சொல்லவுமில்லை. பின்னர் நம்பியார் இதுபற்றிப் பெருந்துயரமுற்றுச் சித்தப் பிரம்மை பிடித்தவனைப்போல் திகைத்து நின்று சோர்வடைந்து சற்றுநேரஞ்சென்று மனந்தெளிந்தெழுந்தனர். பின் ஐங்கரக் கடவுளை நோக்கி எம்பெருமானே! சிறியேன் மீது கொஞ்சமுஞ் சருணையில்லையோ, சிறியோர்செய்த சிறுபிழையெல்

லாம் பெரியோராயிற் பொறுப்பதுகடனே என்னும் பழமொழிப்படி யான்செய்த குற்றத்தை மன்னித்து ஏழையேன் மீது கருணைகூர்ந்து இவைகளைப் புசிக்கவேண்டும் என்று பின்னும் பன்முறை பிரார்த்தித்தனர். அப்பொழுதுங் கணேசப்பெருமான் புசிக்கவில்லை.

பின்னும் நம்பியார் கணேசப்பெரும! கருணைக்கடலே! இறைவன் புதல்வ! எளியேன்மீது என்னவன்மமோ, இதுபற்றி என் தந்தைவந்து என்னை அடிப்பரன்றோ, அப்படி அடிக்கினும் அதற்குள்ளாவேன். அதற்கு யான் ஒரு சிறிதும் அஞ்சவில்லை. அவர் இவ்வூருக்குவர இரண்டு மூன்று நாட்செல்லுமே அதுவரையில் நீர் ஒன்றும் புசியாதிருந்தால் உம்மைப்பசிநோய் வருத்துமே என்று சொல்லி, கன்றுக்குப் பால் கொடாத தலையீற்றுப் பசுவைப்போல வருந்தினர். அப்பொழுதுங் கணேசப் பெருமான் புசிக்கவில்லை. பின்னர் நம்பியார் துன்பமென்னுங் கடலிலாழ்ந்து பின் செய்வதொன்றும் அறியாதவராய், இந்திரன் பிரார்த்தனைக்கிரங்கிக் கலசமுனிவன் கமண்டல நீரைக் கவிழ்த்துக் காவிரி நதியையுண்டாக்கி அவ்விந்திரனை யிரட்சித்த இபமுகனே! சந்திரனுக்கிட்ட சாபத்தை மாற்றித் தண்ணருள் பாலித்த தயாநிதியே! விண்ணவர் செய்த வேண்டுகோட்கிரங்கி இலங்கை மன்னன் எடுத்துச்சென்ற இலிங்கமதனை இந்நாட்டினின்றிருத்திய ஏகதந்தனே! இந்நாட்டினரும் மற்றெந்நாட்டினரும் எதிர்க்கமுடியா விபமுகன்றன்னை எளிதிலழித்து இமையோர் தம்மை இரட்சித்த வரம்பா! என்று துதித்து நின்று, பின்னரும் பெருமானே! பொழுதுபோகின்றது, இப்பொழுதாயினும் கிருபைகூர்ந்து புசித்தருளல் வேண்டும் எனப் பிரார்த்தித்தனர்.

நம்பியார் எவ்வளவு மனம் நைந்து வருந்திப் பிரார்த்தித்தும் கணேசப்பெருமான் உண்ணாதிருப்பக் கண்டு, நைந்தமனத்தினராய், "கணேசப்பெரும! என் தந்தை சொற்படி நின்னைப் பூசிக்க வந்தேன் அப்பூசையில் எனக்குத் தெரியாமல் யாதோ தவறு நேரிட்டதுபற்றி நீர் நிவேதனப்பண்டங்களைப் புசிக்கவில்லை. எவ்வளவு இரந்து கேட்டாலும் அத்தவறு இன்னதெனச் சொல்லவுமில்லை. ஆதலால் எனது உயிரை உமது முன்னிலையில் மாய்த்துக்கொள்ளுகிறேன்" என்று சொல்லி அருகிலிருந்த கருங்கல்லில் தலையை மோதப் புகுந்தனர்.

அப்பொழுது அநாதியே பாசத்தாற் கட்டுப்படாத ஐங்கரப் பெருமான் நம்பியாரது பக்திவலையிற் கட்டுப்பட்டு, முன் கண்ணப்ப நாயனார் தமக்கிருந்த ஒரு கண்ணையுந்தோண்டிய காலத்தில், கண்ணு

தன் மூர்த்தி கனிந்தருள் பாலித்ததைப் போல, "நம்பீ! பொறு பொறு" என்று சொல்லித் தமது துதிக்கையை நீட்டி. நம்பியாரின் சிரசைத் தடவி ஆசீர்வதித்து அங்கிருந்த நிவேதனப் பண்டங்களை உண்ணத் தொடங்கினர். நம்பியார் ஆனந்தமடைந்து எம்பெருமானே! நீர் இவைகளை யெடுத்து உண்பது கஷ்டமா யிருக்குமே யென்று சொல்லி, அரிய தவங்களாற் பெற்றபிள்ளை, பசியால் வருந்துவதைக்கண்ட தாய்போல் அருகிற் சென்று எழுமையுந் தொடரும் உழுவலன்போடு கூடிய இனியவசனங்களால் அங்கிருந்த பண்டங்களை எடுத்தெடுத்துக் கொடுக்க ஐங்கர மூர்த்தி தமது துதிக்கையால் வாங்கி வாங்கி யுண்டனர். பின்னர் நம்பியார் தூப தீபாராதனையாதி சோடசோபசாரமுஞ் செய்து பூசை முடித்து அங்கிருந்த சேடப் பிரசாதத்தினைத் தானுண்டு பசியாறினர்.

பின்னர் நம்பியார் கணேசப்பெருமானை நோக்கி எந்தையே இனிமேல் அடியேன் பாடசாலைக்குச் சென்றால் நேரமாய் விட்டதென்று உபாத்தியாயர் அடிப்பராதலால் சந்தத்தில் மிகுந்த வேத முதலிய கலைகளைத் தேவரீரே சொல்லித்தரல் வேண்டுமெனப் பிரார்த்தித்தனர். விநாயகப் பெருமான் நம்பியாரது பிரார்த்தனைக்கிரங்கி வேத வேதாந்தங்களையும் சிவாகமங்களையும் சிறிதுபாகம், ஒரு சிறிதும் சந்தேக விபரீதமறக் கற்பிக்க, நம்பியார் ஓதியுணர்ந்து மனமகிழ்ந்தனர். பின்னர் நம்பியார் கணேசப்பெருமானிடம் விடை பெற்றுத் தமது இல்லத்திற்கேகினர்.

அவரது தாயார் நம்பீ! இவ்வளவு நேரம் என்ன செய்தனை நிவேதனப் பிரசாதமெங்கே என்று கேட்க, நம்பியார் நிவேதனப் பிரசாதங்களைப் பிள்ளையார் உண்டுவிட்டனர், மிகுதி கொஞ்சமிருந்ததை யான் உண்டு பசியாறினேன். விநாயகப்பெருமானுக்கு அபிஷேக அலங்காரங்களைச் செய்து நிவேதனப்பண்டங்களை அவர்முன்னே வைத்துப் புசிக்கச்சொன்னேன். அவர் என்மீது கோபங்கொண்டு அவைகளைப் புசியாதிருந்ததால் நெடுநேரம் மன்றாடிப் பிரார்த்தித்தேன். பிறகு கோபந் தணிந்து புசித்தனர். அதனால் இவ்வளவு நேரமாயிற்று என்று கூறினர்.

நம்பியாரது தாயார் அவர் சொன்னதை ஒரு சிறிதும் நம்பாது 'நம்பீ! பொய்சொல்லத்தெரியாத உனக்கு இப்படிப் பொய் சொல்லும்படிக் கற்றுக்கொடுத்தவர்யார், நீசொல்வதை ஒரு சிறிதும் நம்பக்கூடியதாகவில்லை; நிவேதனப்பிரசாதங்களை யாருக்காவது கொடுத்தாயா? அல்

லது யாராவது அபகரித்துக்கொண்டு போயினரா? உன்னை அடிக்க
வில்லை உண்மையைச்சொல் என்று கேட்டனர்.

அதனைக்கேட்ட நம்பியார் திடுக்கிட்டு மனத்துயரடைந்து ஒன்
றுஞ் சொல்லத்தெரியாதவராய்ச் சற்றுநேரம் மவுனமாயிருந்து பின்
அம்மா! நான் பொய்சொல்லவில்லை; பொய் பஞ்சமகா பாதகத்திலொன்
றென்று என் தந்தை கூறியது ஞாபகத்திலிருக்கிறது. முக்காலத்தும்
யான் பொய் சொல்லத்துணியேன், யான் சொன்னதுமுற்றும் உண்
மையே என்றனர். அதனைக்கேட்ட தாயார் பொய் சொல்லுகின்றனையே
என்று கேட்டதற்குத் தம்புதல்வன் படும் மனத் துயரத்தைக்கண்டு
ஒருகால் உண்மையாக விருந்தாலுமிருக்கலாம் என்று நினைத்து, "நம்பீ!
நாளையதினம் உன்னுடன் யானும் வருகிறேன் எனக்கெதிரில் ஐங்
கரப்பெருமான் நிவேதனப்பண்டங்களைப் புசிக்கும்படிச் செய்வாயா?"
என்று கேட்க,நம்பியார் அப்படியே செய்கின்றேன் என்றனர். பின்னர்
அவ்வம்மையார் நல்லதிருக்கட்டும் நெடுநேரமாய்விட்டது பாடசாலைக்
குப் போய்வா என்றனர். நம்பியார் அம்மா! இந்த உபாத்தியாயர் சொல்
வதைவிட மிகத்தெளிவாய் நமது விநாயகப்பெருமான் சொல்லிக்கொடுத்
தனர். பாடங்களையெல்லாம் சந்தேக விபரீதமற நன்றாய்க் கற்றுவந்
தேன் ஆனதால் நான் பாடசாலைக்குப் போகவில்லை என்றனர். அவ்வம்
மையார் தம்புதல்வன் சொன்ன இந்த விஷயத்திலும் சந்தேகமுடைய
வராய் இவன்பொய் நாளையதினம் வெளியாய்விடும் என்று நினைத்து
மவுனமா யிருந்தனர்.

பின்னர் நம்பியார் தம்தாயாரை நோக்கி அம்மா! நான்
சொன்ன வார்த்தையைத் தாங்கள் நம்பாததற்குக் காரணமென்னவென்று
கேட்க, அம்மையார் அப்பா! உன் தந்தை பூசித்த இவ்வளவு காலத்
திலே அவர் கொண்டுபோன நிவேதனப் பண்டங்களை ஐங்கரப் பெரு
மானுக்கு நிவேதித்து வீட்டிற்குக் கொண்டுவந்து விடுவாரே தவிர
அவைகளை விநாயகப் பெருமான் புசித்தன ரென்பது ஒரு நாளிலாவது
கிடையாது. இதற்கு மாறாக நீ சொல்லுகிறபடியால் அது நம்பக்கூடி
யதாயில்லை யென்றனர்.

அதனைக்கேட்ட நம்பியார் யோசனை செய்து ஐங்கரக் கடவுள்
நிவேதனப் பண்டங்களை உண்கிற வழக்கமே கிடையாது என்பதை
அப்பொழுதுதான் அறிந்தனராதலால், ஒரு நாளுமில்லாத செய்கை, நம்
பொருட்டுக் கணேசப் பெருமான் இன்றுசெய்தனர்போலும் பெருமான்

நமக்குப் பேரருள் பாலித்தனர். நமது பாக்கியமே பாக்கியமாகும். ம[illegible]து பாக்கியம் தௌர்ப்பாக்கியமேயாம் என்று எண்ணி யெல்லை[illegible]ரானந்த முற்றிருந்தனர்.

நம்பியார் மறுதினமும் அப்படியே பூசனைக்குரிய பண்டங்களை யெடுத்துக் கொண்டு தம் தாயாருடன் ஆலயமடைந்து முன்னாளிற் செய்ததுபோல கணேசப்பெருமானுக்கு அபிஷேக அலங்காரங்களைச் செய்தனர். பின்னர் நிவேதனப் பண்டங்களை அப்பெருமான் முன் வைத்து வேத முதலியவைகளால் துதிசெய்து எம்பெருமானே! சிறியேன் மீது கிருபை கூர்ந்து நேற்றுப் புசித்தது போல இவைகளை யுண்டு பசியாற வேண்டும் என்று பிரார்த்தித்துப் பண்டங்களை எடுத்தெடுத்துக் கொடுக்க, ஐங்கரப்பெருமான் தமது துதிக்கையால் அவைகளை வாங்கி வாங்கி யுண்டனர். பின்னர் நம்பியார் தூபதீப முதலிய சோடசோபசாரங்களைச்செய்து பூசையை முடித்தனர். இவ்வரும் பெருஞ்செய்கையினைக் கண்ணுறக்கண்ட அவ்வம்மையார், தம் புதல்வன்பால் விநாயகப்பெருமான பேரருள் பாலித்ததை நினைந்து நினைந்து அடங்காமகிழ்ச்சியுற்று அப்பெருமானைப் பன்முறை பணிந்து துதித்தனர். பின்னர் நம்பியார் அப்பெருமானைநோக்கி எந்தையே! நேற்றுச சொல்லிக்கொடுத்ததுபோல இன்றைக்கும் பாடம் சொல்லிக்கொடுக்க வேண்டுமென்று பிரார்த்தித்தனர். ஐங்கரபெருமான் தன்னை இத்தன்மையன் என்று அறுதியிட்டுச் சொல்ல வுணராத வேத முதலிய கலைகளைச் சந்தேக விபரீதமற முற்றுமுணரும்படி சந்தத்தோடு போதிக்க, நம்பியார் ஓதி யுணர்ந்து ஐங்கரப்பெருமானிடம் விடைபெற்றுத் தாயாருடன் தமதில்லஞ் சேர்ந்தனர்.

பின்னர் நிவேதனப்பண்டங்களை யுண்டதும் கலை பயிற்றுவித்தது மாகிய, விநாயகப்பெருமானது அற்புதச்செயல்களை அவ்வூரினரும் பிறவூரினருங்கேட்டு அதிசயித்து அன்பின் முதியராய் அப்பெருமான் திருவருளை வியந்து வணங்கி நம்பியாரிடம் வந்து அவரது திருவடிகளில் வீழ்ந்து பணிந்து ஆனந்தமடைந்தனர். பிற்றை நாட்களிலும் நம்பியார் முன்னாட்களிற் செய்தது போல விநாயகப் பெருமானை ஆராதித்து அவரிடமே கலை பயின்று வந்தனர்.

பின்னர் நம்பியாரது தந்தையாகிய ஆதிசைவர்வந்து, தம்புதல்வருக்காக ஐங்கரப்பெருமான் செய்த அற்புதச்செயல்களைக் கேட்டுப் பேரானந்தமடைந்து நம்பியாரை யழைத்து, இனி நங்குலதெய்வமாகிய

ஐங்கரப்பெருமானுக்கு நீயே நாள்தோறும் பூசனை செய்து வரக்கடவாய் எனப்பணித்தனர். நம்பியார் அங்ஙனமே நிகழ்த்தி வருவாராயினர். பின்னர் அவ்வற்புதச் செய்தி, அச்சோழநாடு முற்றிலும் பரவியது. அதனால் அந்நாட்டிலுள்ள சிவனடியார் எல்லோரும் வந்து பொள்ளாப் பிள்ளையாரையும் அவரது அடியவராகிய நம்பியாரையும் தரிசித்து வணங்கிச் செல்வாராயினர்.

நம்பியார் ஐங்கரப்பெருமானிடம் பின் சின்னாட்களில், வேத வேதாங்கோபனிடதங்களையும், சிவாகம புராணேதிகாசங்களையும், பண்டைத்தமிழ் இலக்கிய விலக்கணங்களையும் ஒருசிறிதும் ஐயமறக்கற்று ஒப்புயர் வில்லாப் புலவரேருய் விளங்கினர். "முன்னவனே முன்னின்றால் முடியாத தொன்றுளதோ" என்னும் முதியோர் வாக்கியப்படி எல்லாம் வல்ல ஐங்கரப்பெருமானே போதித்தனவென்றால் இங்ஙனமாதல் ஓர் வியப்பன்றாம்.

ஆதிசைவகுல திலகமூர்த்தியாகிய நம்பியாரை, நம்பியாகிய *ஐங்கரப்பெருமான் ஆண்டகாரணத்தால் நம்பியாண்டார்நம்பி யென எமது தேசிகர்சிகாமணியாகிய கொற்றங்குடிப் பெருந்தகையார் கூறியுள்ளனராதலின் யாமும் அன்னோரது திருவுள்ளப் பாங்கின்படியே நம்பியாண்டார் நம்பியென இனிக்கூறுவோமாக.

---

*நம்பி என்னும் பதத்திற்கு ஆண்மையிற் சிறந்தோனென்பது பொருளாகும். இலக்கணநூலார் இப்பதத்தை உயர்திணையாண்பாற் பெயர்களிலொன்றாக எடுத்தாண்டதும் இக்கருத்துப்பற்றியேயாம். தம்முலகமுய்விக்கவந்த ஸ்ரீமத் சுந்தரமூர்த்திசுவாமிகளை ஆரூரனை நம்பி, நம்பியாரூரனெனக்கூறுவதும் இக்கருத்துப் பற்றியேயாம். உயர்திணைத் தேவர்களிற் சிறந்த பரமேசுவரனை, சுந்தரமூர்த்திசுவாமிகள் தேவாரத்தின் ஒரு பதிகத்தில் "முழங்குங் கடனஞ்ச மருந்து நம்பி என்னையாளுடையநம்பி எனவும், திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரத்தில் "வருந்துயரந்தீர்ப்பானையுமையாணங்கை மணவாள நம்பியை எனவும் துதித்திருப்பது இக்கருத்துப்பற்றியேயாம். இதனால் நம்பியென்னும்பெயர் பரமேசுவரனுக்கும் உரியதென விளங்குகின்றது. முக்கண், செஞ்சடை முதலியவை விநாயகப்பெருமானுக்கும் உரியனவாதல்போல பரமேசுவரனுக்குரிய நம்பியென்னும் பெயரின்றன்மை விநாயகப்பெருமானுக்கு முரித்தாகும். மேற்புகன்றவைகளால் விநாயகப்பெருமானை நம்பியெனல் புதுமையன்றென்பது விளங்குகின்றது. நம்பி என்பதை மூன்றும் வேற்றுமைத் தொகையாகவும், ஆண்டார் என்பதை, செயப்பாட்டு வினைப்பொருளில் வந்த உயர்திணைப் பலர்பாற் படர்க்கையிடத்து, இறந்தகால வினையாலணையும் பெயராகவும் கொண்டு நம்பியால் ஆளப்பட்டவராகிய நம்பியெனப் பொருள்கொள்ளற்பாற்றாம்.

## சோழன் திருநாரையூரடைந்தது.

திருநாரையூர்ப் பொள்ளாப்பிள்ளையார் நம்பியாண்டார் நம்பியின் பொருட்டுச்செய்த, அரிய அற்புதங்களைச் சிவனடியார்கள் சொல்லக் கேட்ட, திருவாரூரில் வாழும் அபயகுலசேகர சோழன் மனங் கனிந்து அப்பிள்ளையாரையும், நம்பியாண்டார் நம்பியையும் தரிசிக்க வேண்டுமென்னும் அவா மிக்குடையோனாயினன்.

அதனால் அச்சோழன்; வாழைப்பழம், மாம்பழம், பிலாப்பழம், கொய்யாப்பழம், நாவற்பழம் முதலிய பழவகைகளையும் சிற்றுண்டி வகைகளையும் ஏராளமாய் அநேக வண்டிகளிலேற்றிக்கொண்டு தமது படைகள்சூழப் புறப்பட்டுத் திருநாரையூரை நோக்கி வந்தனன். அரசன் வருஞ்செய்தியைத திருநாரையூர் வாசிகள் கேட்டு, அவ்வூர் வீதிகளிற் பந்தலிட்டு, அதில் வாழைகளும் கமுகுகளும் நாட்டி, மலர்மாலைகளுந் தோரணங்களும் பூட்டி, சிவசின்னக்கொடிகளைப் பூட்டி அந்நகரைப் பொன்னுலகத்தினுஞ் சிறந்ததாக அலங்கரித்துப் பூரணகும்பமும், குடை, கொடி, முதலியவைகளும் எடுப்பித்துக்கொண்டு எதிர்சென்று அரசனை உபசரித்தனர். அரசன் அவ்வுபசரிப்பையேற்று அந்நகருட் பிரவேசித்துத் தான்கொண்டு வந்த நிவேதனப் பண்டங்களை வண்டிகளினின்றிறைக்கி ஐங்கரப் பெருமான் சந்நிதியில் வைக்கும்படித் தன் ஏவலாளர்களுக்குக் கட்டளையிட்டனன். அவர்கள் அப்பண்டங்களை வைக்க அந்நகர் இடம் போதாமையால் அந்நகரிலும் அதைச்சூழ்ந்துள்ள அநேக கிராமங்களிலும் வைத்தனர்.

அபயகுலசேகர சோழன் அன்போடு சென்று நம்பியாண்டார் நம்பியைக் கண்டு நமஸ்கரித்து,

(க) இக்கலியுகத்தி லெழுந்தவற்புதனே யிணையிலாப் பத்திவாழகமே
முக்கணனளித்த முதல்வனுமைந்து முடக்கிய தடக்கையனுண்ட
திக்கெலாம்புகழுந்தெய்வமேமுன்னுள் சிவபரன்முகம்வருகுலத்தில்
சொக்கமாயுதித்த தோன்றலாங்தேவே தொழும்பனை யாண்டருள் [ன்றே

வேறு

(உ) உலகமெலாஞ் சடமதுவே யுதித்தொடுங்கா திதற்கிறைவனுள்ளானென்னுந், திலதமதி யில்லவராய்த் தெய்வமிலை யென்றுரைக்குந் தீயோர் தங்கள், நிலவுமன மதமகற்ற நீணிலத்தில் வந்துதித்த நிபுணர் கோவே, குலவுமொரு கொம்பனருண், மழைவழங்கு மொருமுகிலேகோதில்தேவே.

௫) எங்குநிறைந் திடுமீசன் சகளவுருவாலயத்தி லிருப்பதாகத்
தங்கிடுபா லான்மடியாற் றருதலெனவவ்வுருவிற்றணந்தேயென்று
மிங்கிதமா யவ்வீச னருளளிப்ப னென்பதனை யிமயரோருந்
துங்கமதி யகன்மூடர் மடமகற்ற விங்குதித்த தூய்மைத் தேவே.

என்று தோத்தரித்து வணங்கி, எங்குடிமுழுதாளுங் குருசிகாமணியே! அடியேன் கொண்டுவந்தவைகளை, தானே முளைத்த தனிப்பரனாகிய ஐங்கரப்பெருமானுக்கு இப்பொழுதே நிவேதிக்க வேண்டுமெனப் பிரார்த்தித்தனன். நம்பியாண்டார்நம்பி கேட்டு மனங்கனிந்து அவ்வரசனது முதிர்ந்த பக்தியையும் திருப்பணியையும் வியந்து ஆலயமடைந்து ஐங்கரப்பெருமானைப் பணிந்து "சுவாமீ! அபயகுலசேகர சோழன் கொண்டுவந்தவைகளை நீ அமுது செய்தருளல் வேண்டும்" எனப்பிரார்த்திக்க ஐங்கரக்கடவுள் நம்பியாண்டார் நம்பியினது அன்பின் முதிர்ந்த சொலலுக்கிணங்கினர். பின்னர் நம்பியார் அரசன் அங்குக் கொண்டுவந்திருந்த பண்டங்களையெல்லாம் நிரீட்சணம், புரோட்சணம், அப்புட்சணம், அபிமந்திரிதம் என்னும் நால்வகைச் சுத்திசெய்து நிவேதிக்க, ஐங்கரர் ஏற்றுத் தமது துதிக்கையால் வாரிவாரி புண்டனர். நம்பியாண்டார்நம்பி தூபதீபாராதனை செய்து முடித்தனர். அதனைக்கண்ட அரசனும் அவனது படைகளும் மற்றும் அடியார்களும் ஆச்சர்யமும் ஆனந்தமுமடைந்தனர்.

## பிள்ளையார் தேவாரத் திருமுறைகளிருக்குமிடம் அருளியது.

பின்னர் அரசன் மனமுருகி நம்பியாண்டார்நம்பியினது திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, அந்தணர் குலமணியே அடியேற்கு ஓர் விண்ணப்பமுளது தேவரீர் அதனைச் செவிசாய்த்து அநுக்கிரகஞ்செய்ய வேண்டுமென்று பிரார்த்தித்தனன். நம்பியாண்டார்நம்பி அதற்கிசைந்து "மன்னவரேறே அதனைச் சொல்வாயாக" என்று கேட்க, அரசன் சொல்லலுற்றனன்.

"அழியாப் புகழ்பொருந்திய சமயகுரவர் நால்வரில் மூவர் திருவாய்மலர்ந்தருளிய தேவாரத் திருமுறைகளாகிய தமிழ்வேதங்கள் முற்றும் இருக்குமிடந் தெரியவில்லை யாதலால், அவைகளை இத்தமிழ்நாடு முற்றுந் தேடுவித்தேன் யாண்டும் அவைகள் கிடைத்தில, அன்றியும் அம்மூவரிலொருவராகிய ஸ்ரீமத் சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய திருத்தொண்டத் தொகையிற்

குறித்த அடியார்களின் பிரபாவங்கள் இத்தகைத்தென விளங்காமையால் பலபெரியோர்களை வினவினேன். அவ்வடியார்களது பிரபாவங்களைத் தெரிந்து சொல்வார் ஒருவருமிலர். இவ்விரண்டு அரிய விஷயங்களும் விளங்காதிருப்பது அடியேற்கு மாத்திரமேயன்றி இத்தமிழ்நாட்டிலுள்ள அடியார்களுக்கும் பெருங்குறைவேயாகும் ஆதலின் இவைகள் இத்தமிழ் நாட்டில் யாண்டும மன்னி நிலவுமாறு, திருமுறைகள் இருக்குமிடத்தையும் அடியார்களது பிரபாவங்களையும் நமது ஐங்கரப்பெருமானைக்கேட்டு அடியேற்கும் இவ்வுலகினருக்கும் அநுக்கிரகஞ் செய்ய வேண்டுமென்பதே எனது வேண்டு கோளாகும்" என்றனன்.

நம்பியாண்டார்நம்பி, மேற்புகன்றவைகளைக் கேட்டு "மன்னவரேறே! நீவிர் விரும்பியவை நமக்கும் ஏனைச் சிவனடியார்களுக்கும் பெரும்பயனளித்தற்குரியனவே ஆதலின் நமது வேண்டுகோட்படி நங்குலதெய்வமாகிய ஐங்கரமூர்த்தியைக் கேட்டுச்சொல்லுகின்றேன்." என்று கூற அரசன் கேட்டு மனமகிழ்ந்திருந்தனன்.

பின்னர் நம்பியாண்டார் நம்பி, திருக்கோயிலையடைந்து பொள்ளாப் பிள்ளையாரைப் பணிந்து சித்த விகற்பம் சிறிது மின்றித் திருவருள் வயத்தராய் ஆனந்தக் கண்ணீர்சொரிய வநதித்து "மூவர் தமிழிருக்குமிடமும் திருத்தொண்டத் தொகையிற் குறித்த அடியார்கள் பிரபாவமும் அடியேற்கருளல் வேண்டும்" என்று பிரார்த்தித்தனர்.

உலகெலாமாயும் அவற்றின் வேறாயும் விளங்கி முக்காலச் செய்கைகளும் முழுதொருங்குணர்ந்த ஐங்கரப்பெருமான் அதற்கிசைநது தேவாரத் திருமுறைகளிருக்கு மிடத்தையும் திருத்தொண்டத் தொகையிற் குறித்த பெரியார்களது பிரபாவங்களையும் விசிதமாகச் சொல்ல, நம்பியாண்டார்நம்பி ஆன்மாக்கண்மீது வைத்த அருங் கருணையினாலே யானைமுகப்பெருமான் திருவாய்மலர்ந்தருளியவைகளை ஒருசிறிதும் தவறாது, தூய்மை பொருந்திய தமது உள்ளத்தின் கண் திருவருட்சார்பினால் மனனஞ்செய்து கொண்டனர். பின்னர் நம்பியாண்டார்நம்பி அபயகுலசேகரசோழனிடம் வந்து ஐங்கரப் பெருமான் அருளிச்செய்தவைகளை மனமகிழ்ச்சியோடு சொல்வாராயினர்.

"அறிவின் மேம்பட்ட சிவனடியார்கள் மிகுந்து வாழும் சீகாழிப்பதியில் அவதரித்த திருஞானசம்பந்தப்பிள்ளையார், திருத்

தோணியப்பரது திருவுள்ளப்பாங்கின்படி உலகமாதாவாகிய உமா தேவியாரால் ஊட்டப்பெற்ற திருமுலைப்பாலையுண்டு அத்தோணியப்பரை இடபவாகனத்தின்மீது தரிசித்துத் திருவாய் மலர்ந்தருளிய "தோடுடைய செவியன்" என்ற தொடக்கத்துச் செய்யுளையுடைய பதிகமுதலாகவும் "கல்லூர்" என்ற தொடக்கத்துச் செய்யுளையுடைய பதிகம் இறுதியாகவுமுடைய தேவாரத்திருப்பதிகங்கள் பதினாறாயிரமாகும்.

திருவாமூர் என்னுந் திருப்பதியில் அவதரித்த திருநாவுக்கரசர் என்னும் அப்பர் சுவாமிகள், திருவதிகையென்னுந் திருப்பதியை யடைந்து அங்குத திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் வீரட்டானேசுவரரை வணங்கி, தன்னை வருத்தும் கொடிய சூலைநோய் தீரும்படித் திருவாய்மலர்ந்தருளிய "கூற்றாயினவாறு" என்ற தொடக்கத்துச் செய்யுளையுடைய பதிகமுதலாகவும் "ஒருமானைத்தரிக்கும்" என்ற தொடக்கத்துச் செய்யுளையுடைய பதிகம் இறுதியாகவுமுடைய திருப்பதிகங்கள் நாற்பத்தொன்பதினாயிரமாகும்.

திருநாவலூரின்கண் அவதரித்த சுந்தரமூர்த்தி சுவாமிகள், திருவெண்ணெய்நல்லூர் என்னுந் திருப்பதியில் திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் கண்ணுதற் பெருமான் தடுத்தாட்கொண்ட பொழுது, திருவாய்மலர்ந்தருளிய "பித்தாபிறைசூடி" என்ற தொடக்கத்துச் செய்யுளையுடைய பதிக முதலாகவும் "ஊழிதோறும்" என்ற தொடக்கத்துச் செய்யுளையுடைய பதிகம் இறுதியாகவுமுடைய திருப்பதிகங்கள் முப்பத்தெண்ணாயிரமாகும்.

இவற்றுள் திருஞானசம்பந்தப்பிள்ளையார் அருளிய திருப்பதிகங்கள் மூன்று திருமுறைகளாகவும், அங்ஙனமே திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிய திருப்பதிகங்கள் மூன்று திருமுறைகளாகவும் அவர்கள் காலத்திலேயே பகுக்கப்பட்டிருந்தன. சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிய திருப்பதிகங்கள் பகுக்கப்படாமலிருந்தன.

என்றும் நிலைபெற்றனவாகிய இத்திருமுறைகள் நெருப்பில் வேகாது, ஆற்றுப் பெருக்கில் எதிர்த்துச்செல்லும், நாலுமடுக்கும் உயிரைக்கொடுக்கும், இடப்பட்டவிஷத்தை முறிக்கும், யானையை வணங்கச் செய்யும், கருங்கல்லைக் கடலில் மிதக்கச்செய்யும். மடுக்கரையில் முதலையுண்ட பிள்ளையைவரவழைக்கும். இத்தகைய பெருமை வாய்ந்ததிருமுறைகள்; பூர்வத்தில் யஜுர்வேதத்தைச் சிச்சிலிப்பறவை விழுங்கியது போலவும், சோமுகாசுரன் நான்குவேதங்களையும் சுருட்

டிக்கொண்டு கடலில் ஒளித்திருந்தது போலவும் யாராலும் அபகா க்கப்படவில்லை.

தில்லைவனம், சிற்றம்பலம், மன்று, கோயில், கனகசபை, புலியூ என்பன முதலிய பல திருநாமங்கள் வாய்ந்த சிதம்பரத்தலத்தின்கண் நீலகண்டராகிய நடராஜப்பெருமான் பஞ்சகிர்த்தியத் தாண்டவ புரியும் சிற்சபையின் மேற்குப்பக்கத்திலேயுள்ள ஓர் அறையில் இத் திருமுறைகளனைத்தையும் அவைகளையருளிய ஆச்சார்யமூர்த்திகள் மூவரும் சேமித்து, அதன் கதவின் மீது தமது திருக்கா முத் திரை யிட்டிருக்கின்றனர். ஆதலால் அவைகளை ஆராய்ந்தெடுத்து வெளிப்படுத்தல்வேண்டும்" என நம்பியாண்டார்நம்பி அரசனுக்குக் கூறினர். அன்றியும் திருத்தொண்டத் தொகையிற்குறித்த பெரியா ரது வரலாறுகளையும், அவர்கள் செய்த திருத்தொண்டுகளையும் அவர்கள் பெற்ற பேறுகளையும் ஐங்கரப்பெருமான் தமக்கு உட தேசித்தவாறு அவ்வாசனுக்குச் சொல்லி முடித்தனர்.

அதனைக்கேட்ட அரசன் இத்தமிழ்நாடு முற்றும் பரவி எக் காலத்தும் நிலைபெற்று வி க்குமாறு இச்சரித்திரங்களைத் தாமே செய்யுள்வடிவமா யியற்றித்தரல் வேண்டுமெனப் பிரார்த்திக்க, நமபி யாண்டார்நம்பி அதற்கிசைந்து அடியார்களது சரித்திரங்களை அந் தாதித் தொடர்புடைய கலித்துறை வடிவமாய் இயற்றித்தந்தனர். இதுவே திருத்தொண்டர் திருவந்தாதி யெனப்படும். ஸ்ரீமத் சேக்கி ழார் சுவாமிகள் பெரிய புராணமியற்றுதற்கு ஆதாரமாயிருந்தது இவ்வந்தாதியேயாம். அன்றியும் விநாயகர் இரட்டைமணிமாலை என் னும் பிரபந்தத்தையும் இயற்றித்தந்தனர். அரசன் அவைகளைப் பெற்று ஓதியுணர்ந்து அவைகளின் உன்னத நடையினையும் ஆழ்ந்த கருத்தினையும் நோக்கிப் பெருமகிழ்வுற்றனன்.

## இருவரும் திருமுறைகளைக் கண்டெடுத்தது.

பின்னர் அரசன் பொள்ளாப்பிள்ளையாரைத் தரிசித்துப்பணிந்து அப்பிள்ளையாரது திருக்கருணையை நினைந்து நினைந்து நெகிழ்ந்து நெகிழ்ந்து, நெக்குருகி மாறுப்பேரானந்தங் கொண்டு, ஆலயத்தி னின்று வெளிப்போந்து நம்பியாண்டார் நம்பியை ஒரு சிவிகையி லேற்றி முன்செல்ல விடுத்துத் தான் ஒரு சிவிகையிலேறிச் சிதம்பரத் தலத்தை நோக்கிச் சென்றனன். பின்னர் அரசன் அத்தலத்தைச் சமீபித்து நம்பியாண்டார்நம்பியுடன் சிவிகையினின்றிறங்கித் தூ லலிங்கங்களாகிய திருக்கோபுரங்களைத் தரிசித்து. நிலமுறப்பணிந்து

நடந்து சென்று அத்தலத்தை யடைந்தனன். அப்பொழுது நடராஜப் பெருமானை அர்ச்சிக்கும் தில்லைவாழந்தணர் முதலினர் அரசன் வருஞ்செய்தியைக் கேள்வியுற்று, பூரணகும்பம் எடுப்பித்துக் கொண்டு பலவகை வாத்தியங்களினொலியும, வேதவொலியும் கடலொலியென முழங்க எதிர்வந்து ஆசீர்வதித்தனர். அரசன் அவர்களைப்பணிந்து உபசரித்து அவர்களுக்குத் தகுந்த மரியாதைகளைச் செய்து அனுப்பிவிட்டு, திருவீதிவலம்வந்து ஆலயத்துட்சென்று சிவாகமங்களும் புராணங்களுங்கூறும் சிவாலய தரிசன விதிப்படி, நடராஜப் பெருமானையும், சிவகாமவல்லித் தேவியாரையும் தரிசித்து வணங்கினன். பின்னர் அப்பெருமான் சந்நிதிக்கண், தில்லைவாழந்தணர்களையும் திருத்தொண்டு செய்பவர்களையும், மற்றுஞ் சிவனடியார்களையும் அழைத்து, அவர்களுக்குத் திருநாரையூர்ப் பொள்ளாப்பிள்ளையார் சொல்லியருளியதைத் தெரிவித்துச் சிற்சபையின் பக்கத்திலேயுள்ள அறையைத்திறந்து அதிற்சேமித்திருக்கும் திருமுறைகளை எடுத்து வெளியிடல்வேண்டுமெனக் கேட்டனன்.

அரசன் சொல்லியதைக்கேட்ட தில்லைவாழந்தணர் முதலினர், திருநெறித் தமிழ்வேதங்களைச் சேமித்துவைத்த சமயாச்சார்யர் மூவரும் வந்தால் அவ்வறை திறக்கக்கூடும், இல்லையேல் திறக்கக்கூடாதென்றனர். அரசன் அதனைக்கேட்டுச் சிற்சபையுடைய நடராஜப் பெருமானுக்கு விபவம்பொருந்திய திருவிழாச்செய்து, தேவாரத் தமிழ்வேதங்களை யருளிய சமயாச்சார்யர் மூவர் திருவுருவங்களைத் திருவீதிகளில் உலாவரும்படிச்செய்து ஆலயத்தை வலம் வருவித்து ஆன்மாக்களது உள்ளங்களை உலையிலிட்ட உலோகம்போ லுருக்காநின்ற தமிழ்வேதத் திருமுறைகள் சேமித்திருக்கும் அறைக் கெதிரில் கொண்டுவந்து "சமயாச்சார்யர் மூவரும் வந்து சேர்ந்தனர்" என்று தில்லைவாழந்தணர் முதலினருக்குக் கூறினன்.

பின்னர் அவ்வந்தணர் முதலினர் சம்மதிக்க அரசன் ஆச்சார்ய சுவாமிகள் மூவரும தமது திருக்கர முத்திரையிட்டிருந்த அறையைத் திறப்பித்து, அதில் திருமுறைச் சேமத்தைக்கண்டு பேரானந்தங்கொண்டு, நமஸ்கரித்தெழுந்து அச்சேமத்தின் கவசத்தினைத் திறப்பித்துப் பார்த்தனன். பாவமிக்குடையோரது அறிவைக் கன்மம் மறைத்திருப்பதுபோல, திருவருண்ஞானம் மிகுந்திருக்கும் திருமுறைகளை நொய்மையாகிய செல்லுப்புற்று மூடியிருந்தது. அரசன் அத்திருமுறைகளைப் புறத்தே எடுத்துவைக்கும்படிச் செய்து

மூடியிருந்த புற்றுமட்குவையை முழுதும் நீக்கிப் பல குடங்களில் எண்ணெயைத் தருவித்து அக்குவை நன்கு நனையும்படியூற்றித் திருவேடுகள் எல்லாவற்றையும் எடுக்க, அநேக ஏடுகள் பழுதுபட்டிருப்பக் கண்டனன்.

இன்பமுந் துன்பமும் கணத்திற்குக் கணம், மாறி மாறி வருமென ஆன்றோர் மொழிந்ததற் கிலக்கியமாக, அரசன் பேரானந்தத் தழுந்தியிருந்த அக்கணமே, துன்பத்துழன்று கண்ணீர் பெருக சம்போ, சங்கரா, கங்காதரா, காலகாலா, கண்ணுதற்பரமா என்று கூறிச் சிந்தைதளர்ந்து மயங்கி நின்றனன்.

அபயகுலசேகர சோழன் இவ்வாறு மெய்யன்போடு துன்பக் கடலிற் கரைகாணாது வருந்தின பொழுது; மெய்யடியார் தன்னை நினைந்து வருந்துதலை ஒருசிறிதும் சகியாத பரமேசுவரனது திருவருளால், அங்குள்ள அந்தணர் முதலினரும் இவ்வரசனுங்கேட்கும்படி "வைதிக சைவசமயாச்சாரியராகிய மூவரது திருப்பாடல்களில் இக்காலத்திற்கு வேண்டுவனவற்றைத் தெரியும்படி வைத்து எஞ்சியவைகளை மண்ணால் மூடும்படிச் செய்தோம். அரச! நீ இதுபற்றி வருந்தற்க" என்று ஓர் அசரீரிவாக்கு ஆகாயத்தின்கண் தோன்றியது. அவ்வாக்கைக் கேட்ட மாத்திரத்தில் அரசன் பரமேசுவரனது திருக்கருணையை நினைந்து நினைந்து தனது மனக்கவலை முற்றும் ஒழித்தனன். அங்கிருந்த மற்றையோரெல்லாம அற்புதமும ஆனந்தமுமுற்றிருந்தனர்.

அரசன் தன் மனக்கவலை முற்றும நீக்கித் தேவாமிருதம் உண்டவரைப்போல் சந்தோஷிக்கச் செய்த நம்பியாண்டார்நம்பியினது திருவடிகளில்வீழ்ந்து வணங்கி, பொன் மணி முதலியன வைத்திருக்கும் பொக்கிஷசாலையைத் திறந்து சிவனடியார்கள் வேண்டுமளவும் கொள்ளக்கடவர் என்று பறையறைவித்தனன் அங்ஙனமே அடியார்கள் மனக்குறைவின்றி விரும்பியமட்டும் வாரிச்சென்றனர்.

## நம்பியாண்டார் நம்பியும் சோழனும் திருமுறைவகுத்தது.

அரசன் அதனைக்கண்டு பேரானந்தங்கொண்டு சமயாச்சாரிய மூர்த்திகள் மூவருளிய தெய்வத்தன்மையுள்ள தேவாரத்திருமுறைகளில் இறைவன் திருவருளால் வன்மீக மருவியதுபோக எஞ்சிக்கிடைத்த பதிகங்களை, முன்னரிருந்தவாறு வகுக்கவேண்டுமென்றுன்னி அதனை நம்பியாண்டார்நம்பிக்குக் கூற, அவரும் இது

செய்யவேண்டியது அவசியமேயென்று ஆமோதிக்க அவ்விருவரும் திருமுறைகளை வகுக்கலாயினர்.

(முதல் இரண்டு மூன்றாவது திருமுறைகள்.)

பின்னர் அவ்விருவரும் ஆளுடைய பிள்ளையார் (திருஞான சம்பந்த சுவாமிகள்) திருவாய்மலர்ந்தருளியதிற் கிடைத்த முன்னூற் றெண்பத்துநான்கு பதிகங்களை முன்னிருந்ததுபோல மூன்று திருமுறைகளாக வகுத்து அவைகளை முதன் மூன்று திருமுறைகளாக அமைத்தனர்.

(நான்கு ஐந்து ஆறாவது திருமுறைகள்.)

பின்னர் ஆளுடைய அரசர் (திருநாவுக்கரசு சுவாமிகள்) திருவாய் மலர்ந்தருளியதிற் கிடைத்த முன்னூற்றேழு பதிகங்களை முன்னிருந்ததுபோல மூன்று திருமுறைகளாக வகுத்து அவைகளை நான்கு ஐந்து ஆறாவது திருமுறைகளாக அமைத்தனர்.

(ஏழாவது திருமுறை.)

பின்னர் ஆளுடைய நம்பியார் (சுந்தரமூர்த்திசுவாமிகள்) திருவாய்மலர்ந்தருளியதிற் கிடைத்த நூறுபதிகங்களை முன்னிருந்தது போல ஒரே திருமுறையாக்கி அதனை ஏழாவது திருமுறையாக அமைத்தனர். தூய்மையாகிய மந்திரங்கள் ஏழுந் முடையனவாயிருத்தல்போல, தேவாரப் பதிகங்களை இங்ஙனம் ஏழு திருமுறைகளாக அமைத்தனர்.

திருஞான சம்பந்த சுவாமிகள் அருளிய திருமுறைகளை, திருக்கடைக்காப்பு எனவும்; திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிய திருமுறைகளை, தேவாரம் எனவும்; சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிய திருமுறைகளை, திருப்பாட்டு எனவும் சைவாதீனத்தார் கூறுவர்.

(எட்டாவது திருமுறை)

அதன் பின்னர் அவர்கள் அக்காலத்தில் விளங்கிய, திருவருட் பெருஞ்செல்வர்களாகிய மற்றைப் பெரியோரருளிய நூல்களையும் இத் திருமுறைகளுடன் ஒரு கோவையாகச் செய்யக்கருதி ஆளுடைய அடிகள் (மாணிக்கவாசக சுவாமிகள்) திருவாய்மலர்ந்தருளிய திருவாசகத்தை எட்டாவது திருமுறையாக அமைத்தனர்.

(ஒன்பதாவது திருமுறை.)

பின்னும் திருமாளிகைத்தேவர், சேந்தனார், கருவூர்த்தேவர், நம்பிகாடவநம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலிய முதர், புருடோத்தமநம்பி, சேதிராயர் என்னும் ஒன்பதின்மர் திருவாய் மலர்ந்தருளிய திருவிசைப்பாமாலையை ஒன்பதாவது திருமுறையாக அமைத்தனர்.

(பத்தாவது திருமுறை.)

திருமூலநாயனார் திருவாய்மலர்ந்தருளிய திருமந்திரம் என்னும் அருட்பெருநூலை, பத்தாவது திருமுறையாக அமைத்தனர்.

(பதினோராவது திருமுறை.)

அரசனுடனிருந்து இவ்வரிய செய்கைகளையெல்லாம் நிகழ்த்திய நம்பியாண்டார்நம்பி நீங்காத மனக்களிப்படைந்து, கோயிற்றிருப்பண்ணியர் விருத்தம் முதலிய பட்டுப் பிரபந்தங்களை இயற்றினர். அரசன் நடராஜப்பெருமான் ஆலயத்திலுள்ள ஆயிரக்கால் மண்டபத்திலே பேரவை கூட்டி அதில் அரங்கேற்ற வேண்டுமெனப் பிரார்த்திக்க, நம்பியாண்டார்நம்பி அதற்கிசைந்து மேற்சொன்ன பட்டுப் பிரபந்தங்களையும், முன் திருநாரையூரி லியற்றிய திருத்தொண்டர் திருவந்தாதி, விநாயகர் இரட்டைமணிமாலை என்னும் இரண்டு பிரபந்தங்களையும் ஆங்கு ஓதிப் பொருள்கூறினர். அச்சபையோர் அந்தப் பிரபந்தங்களிற் பொதிந்துள்ள சொற்சுவை, பொருட்சுவைகளைக் கண்டு, பேரானந்தங் கொண்டு, நம்பியாண்டார்நம்பியைத் துதித்துச் செல்வாராயினர். அபயகுலசேகரசோழன் அகமிகமகிழ்ந்து நம்பியாண்டார் நம்பியைப் பட்டாடைகளாலும் நவமணிமாலைகளாலும் அலங்கரித்து உபசரித்து வணங்கினன்.

பின்னர் அவ்வரசன்; தவராஜ சிவஞானப் பெருஞ்செல்வர்களாகிய மற்றைப் பெரியோர்களருளிய, சிறிய பிரபந்தங்களையும், நீவிரியற்றிய பிரபந்தங்களையும் ஒருங்குதிரட்டித் தரல்வேண்டுமெனப் பிரார்த்திக்க, நம்பியாண்டார்நம்பி; அங்ஙனமே திருவாலவாயுடைய இறையனார் அருளிய திருமுகப் பாசுர முதலிய முப்பது பிரபந்தங்களையும் தாமியற்றிய பத்துப்பிரபந்தங்களையும் ஒருகோவைப்படுத்திக் கொடுத்தனர். அபயகுலசேகர சோழன் பெற்று அத்தனைப் பதினொராவது திருமுறையாக அமைத்தனன்.

மந்திரங்கள் சேர்க்கையால் பதினொன்றாகையால் அதற்கேற்ப முன்னர் வகுத்த திருமுறைகள் ஏழின்மேற் புகன்ற நூல்களைச் சேர்த்துத் திருமுறைகள் பதினொன்றாக்கினர்.

இப்பதினொராவது திருமுறையிலடங்கிய நாற்பது பிரபந்தங்களாவன:—

இறையனாரருளியது (க) திருமுகப்பாசுரம். காரைக்காலம்மையார் இயற்றியன (க) திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம் (உ) திருவிரட்டைமணிமாலை (ங) அற்புதத் திருவந்தாதி. ஐயடிகள் காடவர்கோன் இயற்றியது (க) க்ஷேத்திரத் திருவெண்பா, சேரமான் பெருமாணாயனாரியற்றியன (க) பொன்வண்ணத் தந்தாதி (உ) திருவாரூர் மும்மணிக்கோவை (ங) திருக்கைலாய ஞானவுலா. நக்கீரதேவர் இயற்றியன (க) கைலைபாதி காளத்திபாதி அந்தாதி (உ) திருவீங்கோய்மலை யெழுபது (ங) திருவலஞ்சுழி மும்மணிக்கோவை (ச) திருவெழுகூற்றிருக்கை (ரு) பெருந்தேவபாணி (சு) கோபப்பிரசாதம் (எ) காரெட்டு (அ) போற்றித் திருக்கலிவெண்பா (கூ) திருமுருகாற்றுப்படை (ய) திருக்கண்ணப்பதேவர் திருமறம். கல்லாடனார் இயற்றியது (க) திருக்கண்ணப்பதேவர் திருமறம், கபிலதேவர் இயற்றியன (க) மூத்தநாயனார் இரட்டைமணிமாலை (உ) சிவபெருமான் திருவிரட்டைமணிமாலை (ங) சிவபெருமான் திருவந்தாதி. பரணதேவர் இயற்றியது (க) சிவபெருமான் திருவந்தாதி. இளம்பெருமானடிகள் இயற்றியது (க) சிவபெருமான் திருமும்மணிக்கோவை. அதிராவடிகள் இயற்றியது (க) மூத்தபிள்ளையார் திருமும்மணிக்கோவை. பட்டினத்துப்பிள்ளையார் இயற்றியன (க) கோயினான்மணிமாலை (உ) திருக்கழுமல மும்மணிக்கோவை (ங) திருவிடைமருதூர் மும்மணிக்கோவை (ச) திருவேகம்பமுடையார் திருவந்தாதி (ரு) திருவொற்றியூர் ஒருபாவொருபஃது, நம்பியாண்டார் நம்பிகளியற்றியன (க) விநாயகர் திருவிரட்டைமணிமாலை (உ) கோயிற்றிருப்பண்ணியர் விருத்தம் (ங) திருத்தொண்டர் திருவந்தாதி (ச) ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி (ரு) திருச்சண்பை விருத்தம் (சு) திருமும்மணிக்கோவை (எ) திருவுலாமாலை (அ) திருக்கலம்பகம் (கூ) திருத்தொகை (ய) திருநாவுக்கரசுதேவர் திருவேகாதசமாலை.

### திருமுறைகள் பண் அமைக்கப்பட்டது.

இங்ஙனந் திருமுறைகளை வகுத்தபின், அத்திருமுறைகளுக்குப் பண்வரிசையைப் பெறும்பொருட்டு, அத்திருமுறைகளைப் பண்

னோடு முன்னர் கூறிய திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனூர் வசித்திருந்த *திருவெருக்கத்தம்புலியூரில் பண் வரிசையிற் றேற்சியுள்ளவர்கள் இருக்கலாமெனவூகித்து அபயகுலசேகர சோழனும் நம்பியாண்டார் நம்பியும் அத்திருவெருக்கத்தம் புலியூருக்குச் சென்றனர். பின்னர் அவர்கள் அந்நகரில் விசாரிக்க, அத்தகையோர் இருப்பதாகத் தெரியாமையால், அங்குள்ள ஆலயத்தையடைந்து பரமேசுவரனை வணங்கித் தேவாரத் திருமுறைகளுக்கு இனிய ராகங்களைத் தந்தருளல் வேண்டுமெனப் பிரார்த்தித்தனர். "இத்திருவெருக்கத்தம் புலியூரில் இசைநூலிற் றேற்சியுற்றிருந்த திருநீலகண்ட யாழ்ப்பாணரது மரபிலுதித்துள்ள ஒரு பெண்ணினுக்கு, திருமுறைகட்குரிய இசைத்திறங்களைத் தந்தருளினோம், அப்பெண்ணைத் தில்லையம்பலத்திற் றாண்டவம்புரிபவரது சந்நிதியிலழைத்து வந்து திருமுறைப் பனுவல்களைப்பண்ணோடு பாடுவித்துப் பண்முறை வகுத்தல் தகுதியாம்," என்று அங்கு ஆகாயத்தின்கண் அசரீரி வாக்குத் தோன்றியது. அதனை இவ்விருவரும் கேட்டு அற்புதமும் ஆனந்தமு முற்று அப்பெண்மணியை அச்சந்நிதியிற் றருவித்து யாழ்முதலிய இசைக்கருவிகளின் சுருதிக்கிணங்க, இனிய பண்ணோடு திருமுறைகளைப்பாடுவித்துக் கேட்டு ஆனந்தமடைந்தனர். அசரீரி கூறியபடி அதன் பின் அவ்விருவரும் அப்பெண்ணரசியை உபசரித்துச் சிதம்பரத்திற்கழைத்து [illegible] நடராஜப் பெருமானது சந்நிதியிலே மேற் குறித்தபடி, திருமுறைகளைப் பாடுவித்துத் தில்லைவாழந்தணர் முதலினரோடு கேட்டு மனமகிழ்ந்தனர். பின்னர் அரசனும் நம்பியாண்டார்நம்பியும் மூவர் தமிழ்த் திருமுறைகளுக்குத் திருவருளால் அப்பெண்மணி இசைத்துப் பாடிய பண்களையே நிலைபெறுவித்து அப்பண்களுக்குக் கட்டளைகளையும் வகுத்தமைத்தனர். இப்பண்களே தமிழ்நாட்டில் நிலவுகின்றன.

பின்னர் அபயகுல சேகரசோழனும் நம்பியாண்டார்நம்பியும் திருமுறைகளை யெல்லாம் அவ்வாலயத்திலுள்ள ஓர் அறையில் வைத்து, செல் முதலிய சிறிய பிராணிகள் அணுகா வண்ணம் பாதுகாப்புச் செய்து, இவைகளைச் சுத்தாத்வைத சித்தாந்தசைவப் பெருஞ் செல்வர்கள் யாவரும் ஓதியுணர்ந்து இகபர சுகங்களைப் பெற்றுய்ய

*திருவெருக்கத்தம்புலியூரென்பது சிதம்பரத்திற்கு மேற்கில்சுமார் [illegible] நாழிகை வழி தூரத்திலுள்ளது.

க்கடவர், என்று பணித்துச் சிற்சபாநாதனையும் சிவகாமவல்லித் தேவியாரையும் விதிப்படி தரிசித்து வெளிப்போந்தனர்.

பின்னர் அரசன் நம்பியாண்டார்நம்பிக்குப் பலவகைச் சன்மானங்களையும், வந்தனை வழிபாடுகளையும் செய்து சிவிகையிலேற்றித் திருநாரையூருக்கு அனுப்பிவிட்டுத் தனது இராஜதானி நகர்களி லொன்றாகிய திருவாரூரையடைந்து, ஒவ்வொருநாளும் தியாகேசப் பெருமானைத் தரிசித்து, செங்கோல் கோணாது நெடுங்காலம் அரசு புரிந்து வாழ்ந்திருந்து அத்தியாகேசப் பெருமான் திருவடி நீழலை யடைந்தனன்.

## நம்பியாண்டார் நம்பி முத்தியெய்தியது.

நம்பியாண்டார்நம்பி திருநாரையூரை யடைந்து, காலந்தவறாது பொள்ளாப்பிள்ளையாரைப் பூசித்து, அப்பிள்ளையாரது திருவருளால் சகல ஐசுவரியங்களையும்பெற்று நெடுங்காலம் வாழ்ந்திருந்து, வைகாசி மாதத்துப் புனர்பூச நட்சத்திரத்தன்று,

"பாசமகலாமல் பதியிற்கலவாமல்
மாசில் சமத்துமுத்தி வாய்க்குநாளெந்நாளோ.
ஆணவத்தோடத்துவித மானபடி மெய்ஞ்ஞானத்
தாணுவினோ டத்துவிதஞ் சாருநாளெந்நாளோ."

என்றுதாயுமான சுவாமிகள் கூறியபடி பரமேசுவரனோடு இரண்டறக் கலத்தல் என்னும் சுத்தாத்வைதசித்தாந்த விலட்சணப்படி முத்தியடைந்தனர். சுபம்.

குருசொல்லு மறையாக மங்கண்மூ வேள்வியிவை
கோடாம லோங்கி வாழ்க
மருவின்ற கொன்றையணி சங்கரனை யரித்த தமிழ்
பன்னிருநெறி யோங்கி வாழ்க
கருவிண்ட சிவஞான போதநெறி நின்றிடுங்
கண்ணியர்கள் வாழ்க வாழ்க
திருமன்னு முறைகண்ட செல்வப்புராணமிது
திரமுற்று வாழ்க வாழ்க.

நம்பியாண்டார் நம்பி புராண வசனம்

முற்றுப் பெற்றது.

# திருமுறைப் பெருமை.

## திருஞான சம்பந்த சுவாமிகள்.

புனலிலேடெதிர் செல்லெனச் செல்லுமே
புத்தனார்தலைத் தத்தெனத் தத்துமே
கனலிலேயிடப் பச்சென்றிருக்குமே
கதவுமாமறைக் காட்டிலடைக்குமே
பனையிலாண்பனை பெண்பனையாகுமே
பழையவென்புபொற் பாவையதாகுமே
சினவராவிடந் தீரெனத் தீருமே
சிறந்த சம்பந்தர் செந்தமிழ்ப் பாடலே.

## திருநாவுக்கரசு சுவாமிகள்.

தலைகொணஞ்சமு தாக விளையுமே
தழலினீறு தடாகமதாகுமே
கொலைசெய்யானை குனிந்து பணியுமே
கூராவிடந் தீரெனத் தீருமே
கலைகொள்வேத வனப்பதி தன்னுளே
கதவநீண்டு கதிகத்திறக்குமே
அலைகொள்வாரியிற் கல்லுமிதக்குமே
அப்பர் போற்று மருந்தமிழ்ப் பாடலே.

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

வெங்கராவுண்ட பிள்ளையைநல்குமே
வெள்ளையானை மீதிலிருத்துமே
மங்கை பாகனைத் தூதுநடத்துமே
மருவியாறு வழிவிட்டுநிற்குமே
செங்கலானது தங்கமதாகுமே
திகழுமாற்றிட்ட செம்பொனளிக்குமே
துங்கவாம்பரி சேரற்கு நல்குமே
துலங்கு நாவலூரர்ச் சுந்தரர் பாடலே.

## மாணிக்கவாசக சுவாமிகள்.

பெருகும்வையை தனையடைப்பிக்குமே
பிரம்படிக்குப் பிரான்மேனி கன்றுமே
நரியெலாம்பரி யாகநடத்துமே
நாடிமூகை தனைப்பேசுவிக்குமே

பரிவிற்பிட்டுக்கு மண்சுமப்பிக்குமே
பாமனேடெழு தக்கோ லைபாடுமே
வருகும் புத்தரை வாதினில் வெல்லுமே
வாதவூரர் வழங்கிய பாடலே.

---

கைலைநாதன் சந்நிதியில் நந்திகேசுவரர் விண்ணப்பஞ்செய்த

## பதினாறு பேறுகள்.

மறைகணிந்தனை சைவநிந்தனை பொருமனமும்
தறுகணைம்புலன்களுக் கேவல் செய்யுருச் சதுரும்
பிறவிதீதெருப் பேதையர் தம்மொடு பிணக்கும்
உறுதிநல்லறஞ் செய்பவர் தங்களோடிறவும்.

யாது நல்லன்பர் கேட்பினு முதவுபயல்பும்
மாதவத்திறோ ரொருப்பினும் வணங்கிடு மகிழ்வும்
ஓது நல்லுபதேசமெய் யுறுதியுமன்பர்
தீதுசெய்யினுஞ் சிவச்செய லெனக் கொளுந்தெளிவும்.

மனமும் வாக்குநின் னன்பர்பாலொருப் படுசெயலும்
கனவிலும்முன தன்பருக்கடிமையாக்கருத்தும்
நினைவில் வேறொரு கடவுளை வழிபடா நிலையும்
புனித நின்புகழ் நாடொறு முரைத்திடும் பொலிவும்.

தீமையாம் புறச்சமயங்க ளொழித்திடுந்திறனும்
வாய்மையாகவே பிறர்பொருள் விழையுறா மனனும்
ஏமுறும்பரதாரநச்சிடாத நன்னெஞ்சும்
தூய்மைமகஞ்சின்யா னெனதெனுஞ் செருக்குறாத் துறவும்.

துறக்க மீதுறையினு நரகிற்றோய்கினும்
இறக்கினும்பிறக்கினு மின்பந்துய்க்கினும்
பிறைக்கொழுந்தணிசடைப் பெருமவிவ்வரம்
மறுத்திடா தெனக்குநீ வழங்கல் வேண்டுமால்.

---

## திருநட்சத்திரங்கள்.

### சமையாச்சார்யர், சேக்கிழார் சுவாமிகள்.

பாடிய சம்பந்தர் வைகாசிமூலம் பயிலுமப்பர்
நீடியசித்திரை மாதச்சதய நிறைவன்றொண்டர்

ஆடியிற்சோதி திருநாவலூரர்நல் லானிமகம்
தேடிய சேக்கிழார் வைகாசிப்பூசஞ்சிறந்தனரே.

சந்தான ஆச்சாரியர்.

சித்திரையத்த முமாபதி யாவணித்திங் கடனில்
உத்திரஞ் சீர்கொண் மறைஞானசம்பந்த ரோது கன்னிச்
சுத்த மெய்ப்பூர மருணந்தி யைப்பசிச்சோதிதன்னில்
வித்தகமெய்கண்ட தேவர்சிவகதி மேவினரே.

பட்டினத்துச் சுவாமிகள்.

ஆடியுத்திராட மவிர்பூம்புகார்த்திருவெண்
காட ரொற்றித் தியாகர் கவின்பதியி—னீடுமணி
விற்கோலியங்காட் டிளைஞர்கோலந்தரித்துச்
சிற்கோலமான தினம்.

தாயுமான சுவாமிகள்.

துகளறுசாலி வருடமாயிரத்தைஞ்
ஞூற்றெண்பத்தொன்று தொடரு
மிகுசுபகிருதாம் வருடந்தைமாதம்
வெண்மதிவாரநாள் விசாக
மகிமைசேர் பூர்ணதிதியினிலருத்த
மண்டல சமயத்திற கங்கை
திகழ்கரையதனிற் றாயுமானவரு
சிவத்தினிற் கலந்த நற்றினமே.

இச் செய்யுள் ஷை சுவாமிகள் மாணாக்கர்களில் ஒருவராகிய கோடிக்கரை ஞானியார் என்பவரால் செய்யப்பட்டதெனக் கூறுகின்றனர். இராமநாதபுரத்தையடுத்த ஓர் கிராமத்தில் சுவாமிகள் அடைந்திருக்கும் ஆலயத்தின் சுவற்றிலுள்ள சிலாசாஸனமும் இங்ஙனமே கூறுகின்றது. மேற்சொல்லிய சுபகிருதுவருடந் தைமாதமானது கி-பி-1661௵ பிப்ரவரி௴ ஆகின்றது.

சிவஞான யோகிகள்.

மன்னும் விசுவா வசுவருடமேடமதி
யுன்னிரவி நாட்பகலோ தாயிலியம்—பன்னுந்
திருவாளனெங்கோன் சிவஞானதேவன்
திருமேனி நீங்கு தினம்.

---

PRINTED AT AURORA PRESS AND RAJU PRESS MADRAS.